*மனமிறந்து நித்தியா நந்தமய மாகி*
*மறுவிலா விதேககை வல்லியம்வந் தெய்து*
*மெனவறிந்து துணிந்திடுக சுருதிகுரு பரனு*
*லின்பவீ டடையுநெறி விரும்புறுமுத் தமரே.*

(இ-ள்.) "வினை யிரண்டு மகற லதனாற் றேக பாவ விச்சிந்தி யத னுனே பாசமெலா மொழிதல் பினை யறைந்த வதனுன்" எ - து. நல்வினை தீவினை யென்னும் இரண்டு வினையும் நாசமெய்தலும், அந்த நாசத்தால் தேகான்ம புத்திநீங்கலும், அந்நீக்கத்தால் பாசம் அனைத்தும் ஒருங்கொழிதலும், முடிவிற் கூறிய இந்தப் பாசவொழிவால்; "பராபரமாய் முடிவாய்ப் பெயர்சாதி குறிபெறு தொன்றாகி வாக்கு மனமிறந்து" எ - து பராபரமாகவும், எவற்றிற்கும் முடிவாகவும், இன்னபெயர் இன்னசாதி இன்ன குறி எனப் பெறுது ஏகமாகவும், மனோவாக்குக் கெட்டாது; "நித்தியாநந்த மயமாகி மறுவிலா விதேக கைவல்லியம் வந்தெய்துமென வறிந்து துணிந்திடுக" எ - து. நித்தியாநந்த மயமாகவும் விளங்கும் களங்கமற்ற விதேக கைவல்லியம் வந்து வாய்க்குமென்று தீர்ப்பாக வறிந்து தெளிதி; "சுருதி குரு பரனு லின்பவீடடையுநெறி விரும்புறு முத்தமர்" எ - து. இது சுருதி குருவாற் பேரின்ப வீடடைதற்கு நெறித்தாகலின், இதனைச்சத்துக்கள் விரும்பா நிற்பர், எ - று.

ஏகார மூன்றும் அசை நிலைகள்.

உதயபூருவம் ஐந்து கடிகைக்குள்ளான உஷத் காலத்தில் விழித்துச் சுசியோடுங் கூடத் தான் வழிபடு கடவுள் வணக்கத்தோடும் விதிப்படி மல சல வுபயத் துவார சுத்திசெய்வதே சவுச விதியெனவும், மேற் றந்த தாபன சப்தத் துவார சுத்திசெய்வது தந்த தாபன விதியெனவும், தீர்த்தத்திற் படிந்து மனோசரீரசுத்தி செய்வது ஸ்தான விதியெனவும், மூன்று சுத்தியோடு தான் சிவசொரூபமாக விபூதிதரிப்பது அனுஷ்டான விதியெனவும், பிரணவாதி மந்திரங்களால் உருவேற்றுவது சபவிதியெனவும், பூத சுத்தி முதலிய பஞ்சசுத்திகளோடுந் தான் சிவசொரூபமாயிருந்துசோடசவுபசாரத் தோடு சிவத்தைப்பூசிப்பது பூசாவிதியெனவும், மேற்பிராண பலியோடுங் கூட ஆத்மதிருப்திபண்ணுவிப்பதுபோஜனவிதியெனவும் ஆகிய சப்தவிதிகளும் இங்ஙனமபரான்ன காலத்தில் செய்கின்றதும் இடையிற்றியானபரனு யிருப்பதுமாகலின் நித்திய கருமானுஷ்டானமெனவும்,இவ்வனுஷ்டானஞ் சற்கருமமாய்த் தூய்தான புண்ணிய விசேடமாதலிற் புண்ணியமாமெனவும்,அத் தூய்மையாற் பாவகருமஞ் சேர்தற்கு இடமின்மையிற்பாவவொழிவெனவும், அதன் நீக்கம் நிருமலமாதலிற் குன்றலறு சித்த சுத்தியாமெனவும், அச்சித்த சுத்தியால் விடயத்தின் உண்மை தெரிதலிற் பொய்க்கும் பக் குற்ற நெகிழ்வா,மெனவும், அத்தோஷ திருஷ்டியினுல் ஒன்றினும் பற்றின்மையின் மெய்த்துறவா மெனவும், அவ்விரத்தி சுகவேதுவா யிருத்த

லின் முத்திவிருப்பமா மெனவும், அம்முத்தி விருப்பம் அகமுகத்திற் சார்ந்து பாகிய கன்ம மொடுங்கலின் புறக் கரும வொடுக்கமா மெனவும், அவ்வொடுக்கம் மனோநிக்கிரகத்தை நாடலின் யோகநிலை முயற்சியா மெனவும், அம்முயற்சி தனித் திரும்பதை நாடலிற் பொய்த்த லறு துரிய விழைவா மெனவும், அத்துரிய மிஃதென அறியும் பரமாத்ம விசாரஞானம் வேண்டுதலின் புகலரு மாவாக்கிய ஆராய்ச்சியா மெனவும், அவ்விசாரம் அபேதமாதலின் அதன் சாரமான அத்துவித ஞானமாமெனவும், அவ்வத்துவித ஞானம் அபரோட்சமாதலின் அவித்தியா நாசமாமெனவும், அவித்தையா நாசத்தில் அகமித மென்னும் பிராந்தி நீங்கலின் துவிதமயக் கொழிதலாமெனவும், அவ்வொழிதலால் இன்பதுன்பம் நீங்கலின் சுகதுக்க நினைவொழிவாமெனவும், அவ்வொழிதலால் இராகத்துவேஷ மின்மையின் விருப்பு வெறுப்பறுதலெனவும், அது நீங்கவே யிது செய்யத்தக்கது செய்யத்தகாத தென்னுஞ் சங்கற்ப விகற்பமின்மையின் விதிவிலக் கோய்வாமெனவும், இவற்றாற் சுவர்க்க நரகமின்மையின் வினை யிரண்டும் நீங்குமெனவும், இந்நீக்கத்தில் நாம ரூப பாவனை யின்மையின் தேகபாவ விச்சிந்தியாமெனவும், இவ்விச்சிந்தியினால் அவாவனைத்தும் அன்பாய்க் கரைதலிற் பாசமெலா மொழிதலெனவும், அப்பாசமாகிய மூலாஞ்ஞானம் நசித்தவிடத்திற் பரமான ஈசுரத்தன்மையும் அபரமாகிய சீவத்தன்மையு நீங்கி ஆனுயென்னும் பிரமகூடஸ்த அயிக்கமான அத்துவித சொரூபமாதலின் பராபரமெனவும் இவ்வத்துவித பதத்திற்குமே லொருபதமு மின்மையின் முடிவாயெனவும், இதற் கோருருவ மின்மையிற் பேர் பெறாதெனவும், இஃதொன்றின் அம்சமாகாமையின் சாதி பெறாதெனவும், இஃதிங்ஙன மிருக்குமென ஓர் அடையாள மின்மையின் குறிபெறாதெனவும், இஃதெங்கும் பரிபூரணமாக நிறைந்திருத்தலின் ஒன்றாகியெனவும், இதனை வாக்கினாற் றுதிக்கத்தொடங்கின் அத்துதி முடிவுபெறாது அதிற் கரைதலின் வாக்கிறந் தெனவும், இதனை மனதினாற் சிந்திக்கத் தொடங்கின் அச்சிந்தனத்தில் மனம் அதுவாய்க் கரைந்துபோதலின் மனமிறந் தெனவும், இங்ஙனமியாவுங் கரைந்தவிடத்து நிரதிசயாநந்தமாய் நிறைந்து நிற்றலின் நித்தியாநந்த மயமாகியெனவும், இக்களங்க மனைத்தும் நீங்கித் தானே தானாய் விளங்கலின் மறுவிலா விதேக கைவல்லியமெனவுங் கூறினார்.

இங்ஙனம் விதேக கைவல்லியத்தை யடையும் நிமித்தம் நுதலிய நித்திய கருமானுஷ்டான முதல் பாசம் ஈறாய மரபு இருபதில் முன்னைய எட்டும் பாகிய சாதனமெனவும், இடையின் மூன்றும் ஆந்தர சாதன மெனவும், மேலொன்றுஞ் சாத்திய மெனவும், ஏனைய எட்டும் நீங்கல் சாதன சாத்திய மெனவுங் கொள்க.

வினா:—இவற்றில் வஸ்து நிச்சயம் உபக்கிரமத்திலாவது உபசங்காரத்திலாவது கூறாது மத்தியிற் கூறிய தென்னை ?

விடை:—அவ்வஸ்து சர்வதோமுகமாயிருந்து எல்லாமாய் விளங்குதல் அனுபவமாதலினானும், சுருதிகள் மத்தியகத ஸ்வரூபமென விளம்புதலினானும், விசாரத்தில் ஒன்றிற் சார்பில்லாது நடுவுநிலையாய் விளங்குதலினானும், சாதனத்தில் ஆசிரியர் உபதேச அனுஷ்டானத்தில் எல்லாவற்றிற்குஞ் சாட்சியாய்த் தோன்றுதலினாலும், சாத்தியத்தில் யாவும் பரிபூரணமாய் விளங்குதலினாலும் மரபினும் மத்தியகதமே கூறினாரென்க.

வினா:—இங்ஙனங் கூறிய மரபிற் சீவன் முத்தியைக் கூறாது விதேக முத்தியை மாத்திரங் கூறியதென்னை?

விடை:—சீவன் முத்தியே விதேக முத்தியாதலி னென்க.

வினா:—அற்றேல், அஃதிரண்டாகக் கூறுவ தென்னை?

விடை:—தத்தபட மென்னுமிடத்திற் படத்திற்கு நாமரூபம் இருப்பதுபோலத் தோற்றுவது மாத்திரமேயன்றி, அஃதின்மைபோல, ஞானத்தினாற் றேகபாவ நீங்கியும் இருப்பதுபோலத் தோற்றுவது மாத்திரமேயன்றி யஃதில்லாமையால் அத்தோற்றத்தைச் சீவன் முத்தியெனவும், அது நீங்கினதே விதேகமுத்தி யெனவும் நாவை நாவென்றாற்போலக் கூறினாரென்க.

அதி தீவிர பக்குவவான்கள் விதேகமுத்தியை யடையுஞ் சோபான மார்க்கம் இங்ஙனமெனவும், இங்ஙனம் அதை யடைந்த ஸ்வானுபவ உல்லாசம் இனையதெனவும் உணர்த்தியதென்பதாம். 184

(அ - கை.)

இந்நூற் பெருமையையும் இதனை யடையத்தக்க அதிகாரியின் இயல்பையும் இக்கவி உணர்த்துகின்றது.

வேதமுத லாகியநூ லனைத்தினுஞ்சொற் பொருளை
  விளங்கியிடக் கரதலா மலகமெனக் காட்டிப்
போதமய மாகியபே ரானந்தத் தழுத்தும்
  பொருவிகந்த விந்நூலை முத்திபெறற் குரிய
சாதனநான் கினையுமடைந் தெவரானு மென்றுந்
  தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக் கெண்ணி
யாதரவி னருட்குரவன் றனைத்தேடி யுருகு
  மன்புடையார் தமைக்காணி னளித்திடுக வுவந்தே.

(இ - ள்.) "வேதமுத லாகியநூ லனைத்தினுஞ் சொற்பொருளை விளங்கியிடக் கரதலாமலகமெனக்காட்டி" எ-து. வேதமுதலாயுள்ள எல்லா நூல்களிலுஞ் சொல்லப்பட்ட பொருள்யாதோ, அதனை எவர்க்கும் நன்கு விளங்குமாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோற் காட்டி, "போதமயமாகிய பேரானந்தத் தழுத்தும் பொருவிகந்த விந்நூலை" எ - து. ஞானமயமாய்

விளங்கும் போதாநந்த நிலையில் ஆழ்த்தத்தக்க ஒப்பற்ற இந்த ஞானசாஸ்திரத்தை, "முத்திபெறற்கரிய சாதன நான்கினையு மடைந்தெவராலு மென்றுந் தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக்கெய்யமணி" எ-து. ஐக்கியமுத்தியெய்தற்கரிய சாதன சதுஷ்டயங்களை யடையுமாறடைந்து யாவராலேனும் என்றுந் தடுத்தற்கரிய பிறவிநோயைத் தொலைப்பதற்கெண்ணமுற்று, "ஆர்வமீ ரருட்குரவன் றனைத்தேடி யுருகு மன்புடையார் தமைக்காணி னளித்திடுக வுவந்து" எ-து. மிக்க ஆசைகொண்டு கருணைக்கடலாகிய ஞானாசாரியனை எங்கணுந் தேடி மனமுருகுகின்ற அன்புடைய மாணாக்கர் யாவரோ அவரைக்காணின் மிக்க மகிழ்வுகொண்டு தந்திடுதி, எ-று.

ஏ-அசை. பொருளைக்காட்டி அழுத்தும் இந்நூலெனவும், அடைந்து எண்ணி தேடி உருகு மன்புடையோரெனவு முடிக்க.

தீவிரதர பக்குவமுள்ள சாதனசதுஷ்டய சம்பன்னனான அதிகாரிக்கே யிச்சுவானுபவ நூல் பிறந்தமையின் அவனுக்கே யிந்நூல் உரித்தென்பதை யுணர்த்திய தென்பதாம். 185

# வேதாந்தசூளாமணி

## மூலமுமுரையும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ சற்குருவேநம:



